ஸ்ரீரஸ்து.

அன்னபுகழ் முடும்பை அழகிய மணவாளப்

பெருமாள் நாயனார் அருளிச் செய்த

# ஆசார்ய ஹ்ருதயம்.

விசதவாக் சிகாமணிகளான மணவாள மாமுனிகள்

அருளிச் செய்த

வியாக்கியானத்துடன்.

---

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி [illegible]

அண்ணங்கராசாரியரால்

சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபை மூலமாக

அச்சிடுவிக்கப்பட்டது.

மதராஸ் ரத்தினம் பிரஸ்.

கிடைக்குமிடம்:—

க்ரந்தமாலா ஆபீஸ் காஞ்சீபுரம்

---

விலை 4—4—0

1950

# புதிய வெளியீடுகளின் விளம்பரம்.

## (16—10—50)

### 1. திருவாய்மொழி ஈடு பகவத்விஷயம்

1, 2, 9 பத்துக்கள் 6—0—0.

திருவாய்மொழி மூன்றும்பத்து திவ்யார்த்த தீபிகையுரை 2—0—0.

### 2. ஸ்ரீவசநபூஷண மீமாம்ஸாபாஷ்யம்.

ஸ்ரீ குன்றத்தூரய்யன் அருளிச்செய்ததாக ப்ரஸித்திபெற்ற இந்த க்ரந்தம் ஸம்ஸ்க்ருத பாஷையிலுள்ளதாகையால் தேவநாகரலிபியில் மிகச்சிறப்பாக அச்சிடப்பட்டுள்ளது. விலை 3—0—0

### 3. ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாம பாஷ்யம்.

பட்டர் அருளிச்செய்த பகவத்குணதர்ப்பண மென்னும் இந்த பாஷ்யம் தேவநாகர லிபியில் திருத்தமாக அச்சிடப்பட்டுள்ளது. விலை 2—8—0.

### 4. ஸ்ரீவைகுண்டஸ்தவ வியாக்கியானம்.

கூரத்தாழ்வானருளிச்செய்த பஞ்சஸ்தவங்களுள் முதலதான இந்தஸ்தவம் ஸ்ரீ காஞ்சி அண்ணங்கராசார்யர் இயற்றிய ப்ரதிபதார்த்த தாத்பர்யார்த்த விசேஷார்த்தங்களுடன் அச்சாகி வெளிவந்துள்ளது. மூலம் தேவநாகர லிபியிலும் தமிழ் லிபியிலுமுள்ளது. விலை 1—8—0.

### 5. திருவாய்மொழி எட்டாம்பத்து திவ்யார்த்த தீபிகை.

ஸ்ரீ காஞ்சி அண்ணங்கராசார்யர் இயற்றிய திவ்யார்த்த தீபிகையுரையோடு கூடின நாலாயிர திவ்யப்ரபந்தத்தில் திருவாய்மொழியில் 300 பாசுரங்கள் (அதாவது 8, 9, 10 பத்துக்கள்) நெடுநாளாக பாக்கியிருந்தது. அதில் எட்டாம்பத்து உரை இப்போது வெளிவந்துள்ளது. விலை 2—4—0. மற்ற இரண்டு பத்துகளும் இரண்டு மூன்று மாதங்களுள் வெளிவரும்.) 1, 2, 3, 6, 7 பத்துக்கள் விலை 12—0—0

### 6. ஆசார்ய ஹ்ருதயப் பதவுரை.

ஆசார்ய ஹ்ருதய திவ்யக்ரந்தத்திற்குப் பிரதி பதார்த்தவுரை மிக அவசியம். அது மிக எளிதாகவும் விளக்கமாகவும் ஸ்ரீகாஞ்சி அண்ணங்கராசாரியரால் எழுதப்பட்டுள்ளது. தற்காலம் முதலிரண்டு பிரகரணங்களுக்கு நேர்த்தியாக அச்சாகி வெளிவந்துளது. விலை 2—0—0 (பிற்பகுதியும் விரைவில் வெளிவரும்.)

### 7. நித்யாநுஸந்தேய ஸ்தோத்ரமாலா.

கோயில் திருமலை பெருமாள் கோயில் திவ்ய தேசத்தெம்பெருமான்கள் விஷயமாகவும் ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் முதலான ஆசாரியர்கள் விஷயமாகவும் அநேக பூர்வாசார்யர்கள் அருளிச்செய்த சிறு சிறு ஸ்தோத்ரங்கள் (17) கொண்ட புத்தகமிது. ஸ்ரீகாஞ்சி அண்ணங்கராசாரியரியற்றிய விரிவுரையோடு கூடியது. விலை 1—12—0.

### 8. பூர்வாசார்ய வைபவம்.

ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி வேதாந்ததேசிகன் மணவாளமாமுனிகளீறாகவுள்ள ஆசார்யர்களின் வைபவங்கள் விரிவாகவும் விளக்கமாகவும் அண்ணங்கராசாரியரால் தொகுக்கப்பட்டது, அழகிய புதிய பதிப்பு. விலை 1—8—0.

இன்னமும் ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயநூல்கள் யாவும் தமிழ் தெலுங்கு நாகரலிபிகளில் கிடைக்கும். ஸ்ரீராமாநுஜன் முதலிய மாதாந்தப் பத்ரிகைகளும் வெளிவருகின்றன. நமது ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையில் மெம்பர்களாகச் சேருங்கள்.

(விலாஸம்) :—க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

# முன்னுரை.

## அடியேன் செய்யும் விண்ணப்பம்.

ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் தோன்றியுள்ள நூல்களுள் **ஆசார்ய ஹ்ருதயம்** ஒப்புயர்வற்றதொரு க்ரந்தரத்னம். **நம்மாழ்வா**ரருளிச்செய்த **திருவாய்மொழிக்கு** "தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறிதன்னை, வள்ளல் வடக்குத் திருவீதிப்பிள்ளை, இந்த நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது, ஈடுமுப்பத்தாறுயிரம்" என்று **உபதேசரத்தின மாலையில் மணவாளமாமுனிகள்** அளிருச்செய்தபடி மிகச்சிறந்த வியாக்யானமாகிய [பகவத் விஷயமென வழங்கப்படுகிற] ஈடு முப்பத்தாறுயிரப்படியை அருளிச்செய்தவரான **வடக்குத்திருவீதிப்பிள்ளை** யென்னுமாசிரியர்க்கு இரண்டு திருக்குமாரர்கள் தோன்றியிருந்தனர். அவர்களுள் மூத்தவர் **பிள்ளைலோகாசார்ய**ரென்று உலகம் போற்ற நின்ற ஆசிரியராவர். இளைய திருக்குமாரர் அழகிய **மணவாளப்பெருமாள்நாயனா**ர் என்னுமாசிரியர். இவ்விருவரும் இவ்வுலகுக்குச் செய்தருளிய பேருதவி கைம்மாறிலாதது. ஸ்ரீவசநபூஷணம், முமுக்ஷுப்படி (திருமந்த்ரார்த்தம்) முதலிய அஷ்டாதச (18) ரஹஸ்ய திவ்யக்ரந்தங்களையருளிச்செய்தவர் மூத்தவரான பிள்ளைலோகாசார்யர். அவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனுர் என்னுமிவர் அருளிச்செய்தவை—திருப்பாவைக்கு ஆறுயிரப்படி வியாக்கியானம, அமலனுதிபிரான் வியாக்கியானம், கண்ணிநுண் சிறுத்தாம்பு வ்யாக்கியானம், பட்டோலை என்பதோர் ரஹஸ்யம், அருளிச்செயல் ரஹஸ்யம், **ஆசார்யஹ்ருதயம்** முதலியன.

இவற்றுள் ஆசார்யஹ்ருதய மென்னும் இவ்வரிய பெரிய நூலின் பெயரைக் கேள்விப்படாதவர்கள் பலர் இருக்கலாம். கேள்விப்பட்டவர்களிலும் பலர் "ஸ்ரீவசநபூஷணம் முதலிய மற்ற நூல்களைப்போல் இதுவுமொரு நூல்" என்று இவ்வளவே க்ரஹித்திருக்கக்கூடும்; நூலினுள் இறங்கி ஆராய்ச்சிசெய்திரார்கள். இந்நூலில் பரிசயமுள்ளவர்களும் பெரும்பாலர் இதன் அருமை பெருமைகளை ஆழ்ந்துஅறியப் பெற்றிலர் என்ருல், இப்பேச்சில் யாரும் குறைகூற நேராது. "மற்றநூல்களைப் போலல்லாமல் இது வொரு விலக்ஷணமான நூல்; மிகச்சிறந்தநூல்" என்று இவ்வளவு க்ரஹித்திருப்பவர்கள் சிலருளர். அந்தச் சிறப்பு எப்படிப்பட்டதென்பதையறிய இந்நூலில் ஆழ்ந்த பரிசயம் இன்றியமையாததாம். இவ்வுலகில் அன்றுதொட்டு இன்றறுதியாகத் தோன்றியுள்ள திவ்விய நூல்களில் ஆசார்யஹ்ருதயத்திற்கொப்பானதொரு க்ரந்தம் இதுவரையில் தோன்றவுமில்லை, இனித் தோன்றப்போகிறதுமில்லை. உபநிஷத்துக்கள், இதிஹாஸபுராணங்கள், ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகள் எல்லாம் ஒருங்கே திரண்டு இந்நூலாக வடிவெடுத்திருக்கிறதென்பது உண்மையுரை.

**ஆசார்யஹ்ருதயம்** என்கிற சொல்லானது 'ஆசார்யருடைய திருவுள்ளம்' என்னும் பொருள் பெற்றுள்ளது. வைதிக ஸந்தானத்திற்கு ப்ரதம ஆசார்யரான நம்மாழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக்கருத்துக்களைத் தெளிய வெளியிடுகையாலே, இந்நூலுக்கு ஆசார்யஹ்ருதயமென்று பெயராயிற்று என்பர் பெரியோர். நம்மாழ்வாரென்கிற ஒரு ஆசார்யருடைய திருவுள்ளத்தை மாத்திரம வெளியிடாமல் ஸகல பூர்வாசார்யர்களுடையவும் திருவுள்ளக்கருத்துக்களை யெடுத்துரைப்பது இந்நூலாதலால் "ஆசார்யர்களின் ஹ்ருதயம்" என்கிற பொருளும் பொருந்தும்.

இந்நூலின் அர்த்தங்கள் மிகவும் அதிசயிக்கத் தக்கவை யென்பது ஒரு புறமிருக்க, அர்த்தத்திற் காட்டிலும் சொல்தொடைதானே மிகவும் இனிதாயிருக்குமென்பது இதில் ஸ்வல்ப பரிசயம் பண்ணினவர்களுக்கும் எளிதாகத் தெரியவரும். *சேவிக்

ஆ—மு.

கினிய செஞ்சொல்* என்று திருவாய்மொழிக்கு ப்ரஸித்தியிருந்தாலும் உண்மையாகச் செவிக்கினிய செஞ்சொல் இந் நூலொன்றேயாகும். இந் நூலின் அரிய பெரிய பொருள்களை உள்ளவாறு உணரப்பெறுவதும் நெஞ்சில் தரிக்க வைத்துக்கொள்வதும் எப்படிப்பட்ட மாஞானியர்க்கும் எளிதன்று. நாடோறும் இதன் மூலத்திலும் வியாக்யானத்திலும் அவகாஹித்துக்கொண்டேயிருப்பார்க்கும் இதன் ஆழ்பொருள்கள் அறியவரியனவே.

இந் நூலில் ஒவ்வொரு சொல்லும் பெரும்பாலும் பிரமாணவசனத் தொகுதியேயாகும். ஆசிரியர் தம்முடைய சொந்த வாக்காக எழுதும் வார்த்தைகள் மிகச் சிலவே. நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து வார்த்தைகள் வடமொழி மேற்கோள்களும் தென்மொழி மேற்கோள்களும் வடிவெடுத்தவை, இங்ஙனே நாம் எழுதிவிடுவதனால் பயனில்லை. விளக்கங் காட்டி வாசகர்களுக்குப் பேரின்ப மளிக்கின்றோம்.

இந் நூலில் ஒவ்வொரு மஹாவாக்யமும் சூர்ணை யெனப்படுகின்றது. முதல் சூர்ணை யொன்றைமாத்திரம் எடுத்துக்கொண்டு அது அமைந்திருக்கு மழகை விவரித்துக் காட்டுகின்றோம்.

> " காருணிகனான ஸர்வேச்வரன் அறிவிலாமனிசர் உணர்வென்னும் சுடர்விளக்கேற்றிப் பிறங்கிருள் நீங்கி மேலிருந்த நந்தா வேதவிளக்கைக் கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய்விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின ப்ரதீபமான கலைகளை நீர்மையினா லருள்செய்தான்"

இது இந் நூலின் முதல் சூர்ணை. இதில் நூலாசிரியருடைய சொந்தமான சொல் ஒன்றுகூட இல்லை. சொல்தொடை மாத்திரமே இவருடையது. சொற்கள் யாவும் பூருவர்களின் திவ்ய ஸூக்திகளிலிருந்து அற்புதமாகத் திரட்டப்பட்டுள்ளது.

1. பட்டரென்கிற ஆசிரியருடைய வடமொழி ச்லோகமொன்று; 2. திருமாலைப் பாசுர மொன்று; 3, பேயாழ்வார் பாசுரமொன்று; 4. பூதத்தாழ்வார் பாசுரமொன்று; 5. திருமங்கையாழ்வார் பாசுரங்கள் ஐந்து; 6. பெரியாழ்வார் பாசுர மிரண்டு; 7. நம்மாழ்வார் பாசுரமிரண்டு; 8. திருமழிசையாழ்வார் பாசுர மொன்று. ஆக இவ்வளவு திவ்ய ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு இந்த வொரு சூர்ணை நிருமிக்கப்பட்டுள்ளது. இதில் அடங்கியுள்ள அந்த ஸ்ரீஸூக்திகளை விவரித்துக் காட்டுகிறோம் காண்மின்:—

1. *ஹர்த்தும் தமஸ் ஸதஸதீ ச விவேக்துமீசோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி* இது பட்டருடைய திருவாக்கு.
2. *அறிவிலாமனிசர் * இது திருமாலைப் பாசுரம்.
3. *உய்த்துணர் வென்னு மொளிகொள் விளக்கேற்றி* இது பேயாழ்வார் பாசுரம்.
4. * ஞானச் சுடர்விளக் கேற்றினேன் * இது பூதத்தாழ்வார் பாசுரம்.
5. * பிறங்கிருள் நிறங்கெட *நந்தா விளக்கே* *மறையாய் விரிந்த விளக்கை* *வந்து பன்னுகலை நால்வேதப் பொருளை யெல்லாம் பரிமுகமாயருளிய* *கலைகளும் வேதமும் நீதிநூலும் * இவை திருமங்கையாழ்வார் பாசுரங்கள்.
6. * பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க * *வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு * இவை பெரியாழ்வார் பாசுரங்கள்.
7. * இவையன்றே நல்ல இவையன்றே தீய * *மிக்கஞானமூர்த்தி யாய வேதவிளக்கினைக் கண்டு * இவை நம்மாழ்வார் பாசுரங்கள்.
8. * துளக்கமில் விளக்கமாய் * இது திருமழிசையாழ்வார் பாசுரம்,

ஆக், இத்தனை பாசுரங்களிலுள்ள சொற்களை, தாம் கூற விரும்பிய பொருளுக்குத் தக்கவாறு கண்டங்களாக வெடுத்துத்திரட்டி ஒரு சூர்ணையமைத்துள்ள அதிசயம் என்னே !.

இந்த சூர்ணையில் இவ்வாசிரியர் வெளியிட விரும்பிய விஷயம் யாதெனில், சிறிதும் விடாமல் அதை நம்முடைய வாக்கியமாக எழுதிக் காட்டுகிறோம்;

**அறிவிலிகள், ஞானவிளக்கையேற்றி நிபிடமான அகவிருள் நீங்கப்பெற்று எம்பெருமானுகிற விளக்கைக்கண்டு நன்று தீதுகளைப் பகுத்துணருகைக்காக, அகாரமாகிற விளக்கில் கொளுத்தின சாஸ்த்ரங்களாகிற விளக்கைப் பேரருளாளப்பெருமான் அருள் செய்தான்.**

என்கிற விதுவே முதல் சூர்ணையின் விஷயம். இதைத் தம் திருவாக்கால் அமைத்தருளாமல் முன்னோர்களது மொழிகளைக்கொண்டே வெகு அழகாக வெளியிட்டுள்ளார். 'பகவான பரம கருணையாலே சாஸ்த்ரங்களை உபகரித்தான்' எனகிற விஷயத்தைத் திருமங்கையாழ்வார் ஒரு பாசுரத்தாலும் பட்டர் ஒரு ச்லோகத்தாலும் கூறியிருக்கையாலே, அவ் விரண்டு மேற்கோள்களையும் எடுத்தாள விரும்பிய ஆசிரியர், ஆதியில் **காருணிகனை ஸாவேச்வரன்** என்றதனுல் "**மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி**" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியையும் முடிவில் **நீர்மையினு லருள்செய்தான்** என்றதனுல் "கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொற்பொருள்தானும், மற்றை நிலைகளும் வானவர்க்கும பிறர்க்கும் நீர்மையினுலருள்செய்து" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தையும் தொகுத்தருளினுர்.

பகவான் இப்படிப்பட்ட பேருதவி செய்தருளினது ஜ்ஞானஹீனர்களான மனிசர்களுக்காக வென்று கூற விரும்பிய ஆசிரியர் அதையும் தமது சொல்லால் சொல்லாது **அறிவிலா மனிசர்** எனறிட்டுச் சொன்னது "அறிவிலா மனிசரெல்லாம்" என்கிற திருமாலைப் பாசுரத்தை நினைப்பூட்டவே. மனிசர் அறிவில்லாதவர்கள் என்பதற்கு ஒருமேற்கோள் காட்டவேண்டிய அவசியமில்லையாறுலும, கூடுமானவரையில் பெரியார்களின் ஸ்ரீஸூக்திகளையிட்டே பணிக்கவேணுமென்று இவ்வாசிரியரின் திருவுள்ளமென்பது இதனுல் நன்கு விளங்கும். "முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோல் போற்றுவம்" என்ற நன்னூல் இங்கு நினைக்கத் தக்கது.

இதற்குமேல், **ஞான விளக்கையேற்றி** என்று கூறநினைத்த ஆசிரியர் அதையும் தமது சொல்லாற் சொல்லாமல் ஆழ்வார் பாசுரத்தாலேயே சொல்லுமிடத்து, அவ் விஷயத்திற்குப் பூதத்தார் பாசுரமொன்றும், பேயார் பாசுரமொன்றுமாக இரண்டு மேற்கோள்கள் காட்டத் திருவுள்ளம்பற்றி **உணர்வென்னும் சுடர் விளக்கேற்றி** என்ற சொல்தொடர் அமைத்திருப்பதானது மிகவற்புதம். இதனுல் *உய்த்துணர்வென்னு மொளிகொள் விளக்கேற்றி வைத்து* என்கிற பேயார் பாசுரமும், *ஞானச்சுடர் விளக்கேற்றினேன் * என்கிற பூதத்தார் பாசுரமும் நன்கு காட்டப்பட்டன. "உணர்வென்னும் விளக்கேற்றி" என்றோ "ஞான விளக்கேற்றி" என்றோ மூலமியற்றியிருந்தாலும் இங்கு ஆசிரியர்க்கு விருப்பமான பொருள் தோன்றக் குறையில்லை. ஆறுலும் மேற்கோள்களை அதிகமாகக் காட்டியருளவேணு மென்கிற விருப்பமே இப்படிச்சொல் தொடரமைக்கப் பண்ணிற்று.

இந்த ஸந்தர்ப்பத்தில் மிக முக்கியமாக இங்குத் தெரிவிக்கவேண்டியதொன்றுண்டு; இந்நூலைக் கண்டபாடஞ்செய்து தரித்தாலொழியப் பயனில்லை. அப்படிக் கண்டபாடம் செய்திருப்பவர்கள் மிகச்சிலரே. அவர்களும் பலவிடங்களில் தவறுன— மிகத் தவறுன பாடங்களை அந்த பரம்பரையாக ஆதரித்துள்ளா ரென்பதைப்பற்றி மேலே விரிவாக வரையப்போகிறோம். (இங்கும் சிறிது தெரிவிக்கிறோம்) இப்போது நாமெடுத்து விவரித்த இவ்விடத்தில் "உணர் வென்னும் சுடர்விளக்கேற்றி" என்று

பாடம் பண்ணுமல் 'உணர்வெனும் சுடர்விளக்கேற்றி' என்றே பலரும் பாடம் செய்துள்ளார்கள். ஆசிரியர் எந்த ஆழ்வார் ஸ்ரீஸூக்தியைக்கொண்டு இவ்வாக்கியம் இட்டருளிறரோ அந்த ஸ்ரீஸூக்தியில் "உணர் வேன்னும்" என்றுள்ளதேயல்லது "உணர் வெனும்" என்று (தொகுத்தல் விகாரமாக) இல்லை. திருமங்கையாழ்வாருடைய 'வாடினேன வாடி' என்கிற பாசுரத்தில் "உணர்வெனும் பெரும்பதம்" என்றுள்ளது. ஆனால், அந்தப்பாசுரத்திற்கு இங்கு ப்ரஸக்திலேசமுமில்லை. "உய்த்துணர் வென்னுமொளிகொள் விளக்கேற்றி" என்கிற பேயாழ்வாருடைய வெண்பாவே இங்கு விஷயமாதலாலும் அதில் தொகுத்தல் விகாரமில்லாமையாலும், இல்லாத விகாரமொன்றைப் புகுத்த யார்க்கும் அதிகாரமில்லாமையாலும் "உணர்வென்னும் சுடர்விளக்கேற்றி" என்பதே சுத்தமான பாடம். அந்தபரம்பரையினுல் வந்த தவறுன பாடம் தவிர்க்கத் தக்கது—என்பது இங்கு ப்ராஸங்கிகமாக வுணர்த்தலாயிற்று.

பிறகு நிபிடமான அகவிருள் நீங்கப்பெற்று என்று ஆசிரியர் தாம் கூற விரும்பிய விஷயத்தையும் ஆழ்வார்பாசுரத்தாலேயே சொல்லப்புகுந்து, இதற்கும் இரண்டு ஆழ்வார்களின் பாசுரங்களைக் காட்டவேண்டிப் "பிறங்கிருள் நீங்கி" என்ற சொல்தொடர் அமைத்தது பரம சாதுர்யம். இதில் இரண்டு ஆழ்வார்களின் பாசுரங்கள் அமைக்கப்பட்டுள்ளன *பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கிப் பிறங்கிருள் நிறங்கெட* என்பது திருமங்கையாழ்வாரருளிச்செயல். *பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க* என்பது பெரியாழ்வார் பாசுரம். இவ்விரண்டு பாசுரங்களையும் சேரத் திரட்டியிருக்கு மழகு காண்மின். இங்கு மூலம் "பிறங்கிருள் நீங்கி" என்றுள்ளது. 'பிறங்கிருள்' என்பதனுல் திருமங்கையாழ்வார் பாசுரத்தைக் காட்டினர். 'நீங்கி' என்பதனுல் பெரியாழ்வார் பாசுரத்தைக் காட்டினர். 'பிறங்கிருள் கெட்டு' என்ருவது, 'பேரிருள் நீங்கி' என்ருவது மூலமியற்றி யிருந்தால் ஆசிரியர்க்கு விருப்பமானபொருள் தோன்ருமல் போகாது, தோன்றியே தீரும்; ஆனாலும், இரண்டுமேற்கோள்கள் காட்டினசுவை தோன்ருதன்ரு? பல மேற்கோள்கள் காட்டப்பட்டனவென்பது மேற்பார்வையில் சிறிதும் தெரியாதபடி அமைத்திருப்பதும் ஒரு ஆச்சரியம்! இதுவே இந்நூலுக்கு ஒவ்வொரு சூர்ணையிலும் அஸாதாரணமான சிறப்பு என்றுணர்க.

இதற்குமேல் "எம்பெருமானுகிற விளக்கைக் கண்டு" என்று ஆசிரியர் சொல்ல நினைத்த விஷயத்தையும் ஆழ்வார்பாசுரத்தாலேயே சொல்லுமிடத்து, எம்பெருமானை விளக்காகக் கூறுவது பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய மூவருடைய பாசுரங்களினுலும் ஸித்திக்கின்றதென்று காட்டவேண்டி "மேலிருந்த நந்தா வேத விளக்கை" என்ற சொல்தொடர் அமைத்தது வெகு அற்புதம். * வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு* என்றவர் பெரியாழ்வார். *நந்தா விளக்கே* என்றவர் திருமங்கையாழ்வார். *மிக்கஞான மூர்த்தியாய வேதவிளக்கினை கண்டு* என்றவர் நம்மாழ்வார். இம் மூன்று மேற்கோள்களும்விளங்குமாறு "மேலிருந்த நந்தா வேத விளக்கைக்கண்டு" என்று தொடுத்தது மற்ருெருவர் மதிக்கும் நிலமன்று. மேலிருந்த விளக்கை யென்ருே, நந்தாவிளக்கையென்ருே, வேதவிளக்கை யென்ருே ஏதேனுமொரு விதமாகப் பேசியிருந்தாலும் போதும்; ஆனால், மூன்று மேற்கோள்கள் காட்டினவழகு அப்போது விளங்காதன்ருே? இதிலும் பல மேற்கோள்கள் காட்டப்பட்டனவென்பது தெரியாதபடியே சொல்தொடை அமைந்துள்ளது.

இதற்குமேல் நன்றுதீதுகளைப் பகுத்துணருகைக்காக வென்று தாம் சொல்ல நினைத்த விஷயத்தையும் இரண்டு மேற்கோள்களால் கூறவிரும்பிய ஆசிரியர் "நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு" என்று சொல்தொடர் அமைத்தார். இதில் *இவையன்றே நல்ல இவையன்றேதீய* என்ற நம்மாழ்வார் பாசுரமும், *ஸதஸதீச விவேக்தும்* என்ற பட்டர் ச்லோகமும் கையாளப்பட்டிருப்பது காண்க. நல்லதும் தீயதுமறிகைக்கு என்ருே, ஸதஸத்துக்களை விவேகிக்கைக்கு என்ருே மூலமியற்றியிருக்கலாம்; ஆனால், அப்போது

ஒரு ப்ரமாணவசனமே மேற்கொண்டதாகும், அவ்வளவில் த்ருப்தியடைபவரல்லரே இவ்வாசிரியர்.

இதற்குமேல் "அகாரமாகிற விளக்கில்" என்று சொல்ல நினைத்த ஆசிரியர், அகாரத்தை விளக்காகக் கூறுவது திருமங்கை யாழ்வாருடையவும திருமழிசையாழ்வாருடையவும் பாசுரங்களினால் ஸித்திக்கின்றதென்று காட்டவேண்டி மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின என்று சொல் தொடர் அமைத்தார், *மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை* என்றருளிச் செய்தவர் திருமங்கையாழ்வார்; *தோன்று சோதி மூன்றுமாய்த் துளக்கமில் விளக்கமாய்* என்றருளிச்செய்தவர் திருமழிசையாழ்வார்; இவ்விரண்டு மேற்கோள்களும் உணரலாம்படி "மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கொளுத்தின" என்று மூலமமைத்தது மற்றொருவருடைய சிந்தைக்கும் கோசரமன்று. மறையாய் விரிந்த விளக்கிலென்றோ, துளக்கமில் விளக்கிலென்றோ இயற்றியிருந்தாலும் குறையில்லை. ஆனால், அப்போது இச்சுவை காணமுடியாததாகும்.

இந்த முதல் சூர்ணையில், ஞானத்தை ஒரு விளக்காகவும், எம்பெருமானை ஒரு விளக்காகவும், அகாரத்தை ஒரு விளக்காகவும் பேசிவந்தபடிக்கிணங்க, சாஸ்த்ரத்தையும் ஒரு விளக்காகப்பேசவேண்டி ப்ரதீபமானகலைகளை யென்று மூலமியற்றியுள்ளார். இதிலுள்ள 'ப்ரதீபமான' என்கிற விசேஷணமானது பட்டர் ஸ்ரீஸூக்தியிலிருந்து கொள்ளப்பட்டது ; (*மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி*என்றாரே அவர்.) அதற்குமேல் கலைகளை என்கிற விசேஷ்யமானது *கலைகளும் வேதமும் நீதி நூலும்**பன்னுகலை நால்வேதம்* என்ற திருமங்கையாழ்வார் பாசுரங்களிலிருந்து கொண்டு கூறப்பட்டது.

இந்த சூர்ணையின் ஆரம்பத்தில் திருவுள்ளம் பற்றின காருணிகோததாதி என்ற பட்டர் ஸ்ரீஸூக்திக்குச் சேர நீர்மையினாலருள் செய்தானென்று திருமங்கையாழ்வார் பாசுரத்தினால் முடித்ததானது மிகவும் ரஸிக்கத்தக்கது.

மற்றொரு விஷயமும் குறிக்கொள்க. அதாவது, திவ்ய ப்ரபந்தப் பாசுரங்களுக்குப் பெரியவாச்சான் பிள்ளை முதலானோர் அருளிச்செய்த வியாக்யானங்களில் காணாத சில அர்த்த விசேஷங்களும் இவ்வாசிரியர் திருவுள்ளம் பற்றுவதுண்டு. நிர்வாஹ பேதங்கள் என்கிற முறையிலே இது நிதற்றதேயாகும். இப்படி இவ்வாசிரியர் கொண்டதோர் அர்த்த விசேஷமும் இந்த முதல் சூர்ணையிலேயே காணக்கிடக்கின்றது. *மறையாய் விரிந்த விளக்கை* என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் காணாத பொருள் இவர்கொண்டது. எம்பெருமான்றன்னையே ஸாக்ஷாத்தாய் மறையாய் விரிந்த விளக்கென்று ஆழ்வார் கூறினதாகப் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானம் காட்டுகின்றது. இவ்வாசிரியரோ வென்னில் ஸகலவாக்குக்களுக்கும் வித்தான அகாரத்தை மறையாய் விரிந்த விளக்கென்று சொன்னதாகக் கொண்டு அந்த அகாரத்திற்கு எம்பெருமான் பொருளாயிருப்பவனென்கிற காரணத்தினால் [அந்த ஸாமாநாதி கரண்ய நிதாநத்தினால்] ஆழ்வார் பாசுரத்தில் எம்பெருமான் பொருள்படுகிறானென்று திருவுள்ளம்பற்றி இந்த சூர்ணையில் அகார பரமாகவே அந்தப் பாசுரத்தை மேற்கொண்டருளினார். இப்படிப்பட்ட நிர்வாஹ பேதம் இந்நூலில் ஐந்தாறிடங்களில் வருவதுண்டு மேலே "பண்ணார் பாடல் பண்புரை யிசைகொள் வேதம் போலே" [50] என்ற சூர்ணையின் வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியுங்காண்க.

மற்றுமொரு பரம ஆச்சரியமான விஷயமும் இந்த திவ்யக்ரந்த அமைப்பில் பொலிந்துள்ளது. அதாவது, பலபல பாசுரங்களை இவ்வாசிரியர் மேற்கோளாக எடுத்தாளச்செய்தேயும் அவை இவருடைய ஸொந்தவாக்யம்போல் வரிசையாக அந்வயம் பெற்று விளங்கா நிற்கும். மற்றை நூல்களில் மேற்கோள்களைக் காட்டினால் "என்கிறபடியே" என்றும் "என்று" என்றும் இடையிடையே காணப்படும். அவை ப்ரமாண

வசனங்களென்று தனிப்பட்டு நிற்குமேயொழிய நூலாசிரியருடைய வாக்யசைலியாகவே பொருந்திப் பொருள்படமாட்டா. ஸ்ரீவசநபூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி, ரஹஸ்யத்ரயஸாரம் முதலிய ஸகல க்ரந்தங்களும் அவ்வகையிலேயே அமைந்தன. இந் நூலில் அப்படி மேற்கோளெடுத்துக் காட்டுவதாகத் தாமே கூறுகிற விடங்கள் மிகச்சில; "மறந்தேனறியகிலாதே உணர்விலேனேனிலேனயர்த் தேன்றும்" "கடன்ஞாலம் மின்னிடை மல்லிகை ... வாயுந்தீர்ப்பா ரேன்னுமவற்றிலே தோன்றும்" என்பவை முதலிய சில சூர்ணைகளில் மாத்திரமே மேற்கோளான ப்ரமாணவசநங்கள் தமது வார்த்தையாக அமைந்து பொருள்படாமல் "என்று" "என்றவை" "என்கிற" இத்யாதி பதங்களைச் சேர்த்துத் தனியந்வயமாகக் காட்டப்பட்டிருக்கும், பெரும்பாலும் அப்படியல்லாமல் 'பிரமாணவசனங்களான மேற்கோளிவை' என்றே பிறரால் தெரிந்துகொள்ள முடியாமலும், அப்படி எடுத்தாளப்படுகிற அவையும் வரிசையாய் மிகப்பொருத்தமான அந்வயம் பெறும்படியாகவும் தொடுக்கப்பெறுவது இவ்வாசிரியரொருவர்க்கே சிறப்பாகவும் அற்புதமாகவும் அமைந்த நடை. இந்நூலில் இந்த நடையொனறே மாஞானிகளின் நெஞ்சையுருக்கக் கூடியது. இவ்விஷயத்தையும் மேலே நாமெடுத்து விவரித்த முதல் சூர்ணையிலேயே காணலாம். "உணர்வென்னும் சுடர் விளக்கேற்றி" "பிறங்கிருள் நீங்கி" மேலிருந்த நந்தா வேதவிளக்கை" "மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில்" என்னுமிந்த வாக்கியங்களில் ஒவ்வொன்றிலும் பல மேற்கோள்கள் புகுந்திருக்கவும் "என்கிறபடியே" என்னவேண்டிய அவகாசமேயில்லாமல் இவருடைய ஸொந்த வாக்குப்போலே ஒன்றோடொன்று இணங்கி வரிசையாக ஒரு நீராய்ப் பொருள் பட்டிருக்குமழகு ஒவ்வோரிடத்திலும் ஆழ்ந்து ஆராய்ந்து உணரவேண்டிய மஹத்தான அதிசயம். பலபல மேற்கோள்களையும் தமது வார்த்தையாகவே ஆக்கி அடைவே அந்வயம் பெறத் தொடுப்பதென்பது தனிப்பட்டதொரு சக்தி விசேஷமன்றோ.

இங்ஙனே எடுத்து நிரூபிக்கவேண்டிய அதிசயங்கள் இந்நூலில் அளவற்றவை. ஒப்புயர்வற்ற சாதுர்யமும் ஈடுமெடுப்புமில்லாத பாண்டித்யமும் மிகவிளங்க அமைந்தது இவ்வுலகின்கண் இந்நூல் ஒன்றேயென்று எத்தனை தடவை கூறினாலும் மிகையாகாது.

இந்நூலைக் கண்டபாடமாக்கி யநுஸந்தானம் செய்துவருவாருமுளர். அவர்கள் நெடுநாளைக்கு முன்பு அச்சிடப்பட்டிருக்கின்ற மூலப்பதிப்புகளிலும் வியாக்கியானப் பதிப்புகளிலும் காண்கிற பலவகைப் பிழைகளையும் விடாமல் தமது கண்டபாடத்திலே ஆதரித்து வருகிறார்களென்பதைப் பலவிடங்களிலே நாம் கண்டு வருந்துவதுண்டு பெரும்பாலும் பிரசாரமுள்ள திவ்யப்ரபந்தப் பாசுரங்களிலுமே பலபல பிழைகள் புகுந்துள்ளனவென்றால், எளிதில் பொருளுணரமுடியாத இந்நூலில் அவை புகக் கேட்கவேணுமோ? அப்பிழைகளையெல்லாம் அகற்றி அடியேன் சுருக்கமான கருத்துரையுடனும், விரிவான கருத்துரையுடனும், பதவுரையுடனும் மூன்றுபதிப்புகள் செய்திருக்கின்றேனென்பதையும் இங்கு விண்ணப்பம் செய்துகொள்ளுகிறேன்.

நல்ல பாடங்களைக் காட்டினாலுங்கூட ரஸிக்கமாட்டாதவர்களும் அநாதிவாஸநா பலத்தாலே ஆக்ரஹப் படுகிறவர்களும் எக்காலத்திலும் எந்நாட்டிலு முளர். இற்றைக்கும் பலரால் ஆதரிக்கப்படுகிற தவறான பாடங்களில் சிலவற்றை யெடுத்துக்காட்டி; அங்கு இருக்கவேண்டிய யுக்தமான பாடங்களையும் குறிப்பிடுகிறேன். ரஸிகர்கள் கண்டு ரஸிக்கவேணும். கூடிய மட்டில் திருத்தமான பாடங்களையே கொண்டிருக்கும் மஹான்களும் குறிக்கொள்க.

1. முதல் சூர்ணையில் "உணர்வெனும் சுடர்விளக் கேற்றி" என்கிற பாடம் அச்சுப் பிரதிகளிலும் கண்டபாடங்களிலும் வந்திருக்கிறது. இங்கு "உணர் வெனும்"

என்பது பிசகு; 'உணர்வென்னும்' என்றிருக்க வேண்டுமென்பது கீழே விவரிக்கப் பட்டுள்ளது காண்க.

2. ஆறுவது சூர்ணையில் "இவற்றுக்குக் காரணம் இரண்டி லொன்றில் ஒன்று கைகள்"—என்பது தவறுனபாடம். "முக்குணத்திரண்டவையகற்றி, ஒன்றினில் ஒன்றி நின்று" என்கிற திருவெழு கூற்றிருக்கைப் பாசுரம் இங்கு விஷயவாக்கியமாதலால் ஒன்றினில்' என்பதே சுத்தபாடம்.

3. பதினைந்தாவது சூர்ணையில் 'ஆஸ்திக்யம் விவேகம்' என்று தனித்தனிப் பதமான பாடம் பிசகு; இது அந்வயியாது. "ஆஸ்திக்ய விவேகாந்ய சேஷத்வ...', என்று ஸமஸ்தமான பாடமே சுத்தமானது.

4. இருபதாவது சூர்ணையில் "உணர்ந்துணர்ந்துணர்வும்....மிகவுணர்வு முண் டாம்" என்கிற பாடம் மிகவும் தவறு. சிறிதும் அந்வயியாது. உணர்வு உண்டாகு மென்று இங்குச் சொல்லுகிறதன்று. சூர்ணையின் தொடக்கத்தில் இவை என்றிருக் கிறது. அதுவே எழுவாய். கீழ்ச் சூர்ணையில் சொன்ன ப்ரவ்ருத்தியும் நிவ்ருத்தியும் உண்டாம் என்றபடி. அவை எதனாலேயுண்டாம் என்னில், அந்த ஹேதுக்களைச் சொல்லு கிறது இந்த சூர்ணை. "ஸ்வரூபத்தை உணர்ந்துணர்ந்துணரவும் உணர்வைப்பெறவூர மிகவுணரவுமுண்டாம்" என்பது திருத்தமான பாடம். உணர-உணர்வதனாலே என்றபடி.

5. முப்பத்தைந்தாவது சூர்ணையில் "குலந்தரு மென்றும் மாசில்குடிப்பழியென் னும்" என்பது தவறுனபாடம். 'குலந்தருமென்கிற பாட்டிற் கூறியபடியே கிடைக்கிற மாசில் குடிக்குப் பழியாகுமென்கிற காரணத்தினால்' என்று இங்கு விவக்ஷிதமான பொருளாதலால் "குலந்தரு மென்னும் மாசிற் குடிப்பழி யென்று" என்பது திருத்த மான பாடம். "குலந்தரு மாசிற்குடிப்பழியென்று" என்றுமொரு பாடமுண்டு; அதில் அவ்வளவு பாதகமில்லை.

6. சூ. 36ல் "கோத்ரஸூத்ர சரணகூடஸ்தர்" என்பது "கோத்ர சரணஸூத்ர கூடஸ்தர்" என்றிருக்கத்தக்கது. இந்த க்ரமத்திலேயே மணவாளமாமுனிகளின் வியாக் கியானம் அவதரித்திருப்பதனால்.

7. சூ. 37ல் "அறியக்கற்று வல்லரானால்"— 'வல்லாரானால்' என்றிருக்க வேணும். ஆழ்வார் ஸ்ரீஸூக்தி அங்ஙனே யிருக்கையாலே. *அறியக்கற்றுவல்லார் வைட்டணவர் ஆழ்கடல் ஞாலத்துள்ளே * என்கிற திருவாய்மொழிப்பாசுரமே இங்கு விஷய வாக்கியம்.

8. சூ. 49ல் "சொல்பயிற்றிய வேதம்" என்பது தவறு. "சொல்பயிற்ற, வேதம்" என்பது திருத்தமான பாடம். சொல்பயிற்ற—கற்பித்ததனாலே என்றபடி.

9. சூ. 54ல் "ஸ்வரூப ரூபகுணவிபூதி...." இங்கே 'ரூப' என்பது சேராது; 'ஸ்வரூப குணவிபூதி' என்றிருக்கவேணும். ரூபமென்பது மேலே தனிப்பட வருகிறது.

10. சூ. 57ல் "கருவுள் வேறிலாமை"—வேறலாமை என்பது திருத்தமான பாடம். "வெள்ள நீர்ச்சடையானும் நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும்" என் பது மூல ஸ்ரீஸூக்தியாதலால்

11. சூ. 60ல் "காயோடென்னுமவையே" என்பதில் "என்னுமிவையே" என்று திருத்தவேணும்; "வீழ்கனியு மூழிலையுமென்னுமிவையே நுகர்ந்து" என்கிற பெரிய திருமடற்சந்தை இங்கு விஷயவாக்ய மாதலால்,

12. சூ. 63ல் "விசும்புந்துழாய் திருமாலேன்றும் எங்கே காண்கேனேன்றும் இவரலமாப்பு" என்கிற பாடம் மிகத்தவறு. அநந்விதம். "திருமாலென் றெங்கே காண்கே னென்னு மிவர்" என்பது திருத்தமான பாடம்.

13. சூ. 63-ல், "வேதாதிகளில் பௌருஷமான கீதாவைஷ்ணவங்கள் போலே" என்றவிடத்தில் பௌருஷமாநவ கீதா... ..." என்பது திருத்தமான பாடம். *வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்ம சாஸ்த்ரேஷு மாநவம்* என்கிற ப்ரமாணவசனமன்றோ இங்கு விஷயம்.

14. 'ம்லேச்சனும் பக்தனுனல்' இத்தியாதி 85 ஆம் சூர்ணையில் "முடிமன்னனும்" என்பது 'முடிமன்னவனும்' என்று திருத்தத் தக்கது. "துளங்கு நீண் முடியரசர்தங் குரிசில் தொண்டைமன்னவன்" என்கிற" பெரிய திருமொழிப் பாசுரம் இங்கு விஷய வாக்யம்.

15. சூ 94-ல் "கழறலர்ஞான முருவின" என்பது சிறிதும் அர்த்தமில்லாத பாடம். திருவிருத்தத்தில் *கழலறமொன்றே நிலமுழுதாயிற்று* என்றபாட்டில் 'கழறலம்' என்றும் 'அழறலர்' என்றும் வருவதால் அந்தவாஸனை கொண்டு இங்கு "கழறலர் ஞானமுருவின" என்று பாடம் பண்ணிவிடுகிறார்கள். "கழலலர் ஞானமுருவின" என்பது சுத்தமானபாடம். (உலகளந்த) கழலென்ன அலர்ஞானமென்ன [அதாவது தனது விகஸிதஜ்ஞானமென்ன] இவ்விரண்டும் மறுபாடுருவின பரப்பெங்கும் என்றபடி.

16. சூ, 102. "இடகிலேன் நோன்பறிகிலேன்" என்பது அங்வயிக்க முடியாத அபத்த பாடம். "......நோன்பறிவிலேன்" என்பது திருத்தமான பாடம். "நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்" என்கிற விஷய வாக்யத்தோடும் பொருந்தும்.

17. சூ. 112. * இவன் நடுவே அடியானித்யாதி—சூர்ணையில் "வன்களவி லநுபவமாக" என்று திருத்திக்கொள்க.

18. "வித்யை தாயாகப்பெற்று" இத்யாதியான 121 ஆம்சூர்ணையில் "நோக்கியலங்கரித்து" என்கிறபாடம் சிறிதும் பொருள்படமாட்டாது "நோக்கியர் அலங்கரித்து" என்றே பாடம். "மானேய்நோக்கியரான திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் எதிரே வந்து...அலங்கரித்து" என்கிற வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்க. *மழலை தீரவல்லார் காமர்மானேய் நோக்கியர்க்கே * என்கிற பாசுரமன்றோ இங்கு விஷயம்.

19. அழுந்தொழுமித்யாதி 127ஆம் சூர்ணையில் "ஊணுக வீரசரிதம் கற்பார்" என்கிற ஸ்தானத்தில் 'வீரசரித மூணுகக் கற்பார்' என்கிறபாடம் காண்கிறது.

20. "என்பெறுதி யென்ன ப்ரமியாது" 152 ஆம் சூர்ணையில் "கடந்து புகுந்து தகைவறப்புக்கு" என்பது தவறு. "கடந்து புகும் தகைவறப்புக்கு" என்பதே திருத்தமான பாடம். கடந்துபுகும் தகைவு அற—கடந்து புக வேண்டுகையாகிற தகைவு இல்லாதபடி என்க.

21. சூ. 156. 'நம் பிழையும்' என்பது பிசகு; தம் பிழையும்' என்பதே சுத்தபாடம். திருவாய்மொழியில் *என்பிழையே நினைந்தருளி* என்ற பாசுரத்தையுட்கொண்டு ஆசிரியர் தாம் கூறுவதாதலால் தம்பிழையுமென்பதே பொருந்தும். நம்பிழையுமென்றால் அங்வயியாது.

22. சூ. 160. 'மண்ணோர் விண்ணோர் வேற்பில்'—இங்கு வெற்பில் என்பது தவறு; வைப்பில் என்பதே சுத்தபாடம். "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" என்கிறபாசுரம் இங்கு விஷய வாக்யம், "தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே"

என்கிற பாசுரத்திற்குச் சேர 'வேற்பில்' என்கிற பாடமும் இருக்கலாமென்று சிலர் கூறுவது இவ்விடத்து ப்ரமேயமின்னதென்று அறியாமையினாலாகும். திருமலையை அந்தர்யாமி ஸ்தானத்திலேயாக்கி அருளிச்செய்யுமிடம் இதுவாதலால் அதற்குச் சேர 'வைப்பில்' என்பதே பொருந்துமென்பதை மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் விசதமாக்கும்.

23. சூ. 173. "ஸௌகுமார்ய ப்ரகாசம் அச் சேரியிலே"—ஆய்ச்சேரியிலே யென்பது சுத்தபாடம் "உடையநங்கையார் பிறந்தகமாகையாலே ஆழ்வார்க்கு ஆய்ச்சேரியாயிருப்பதாய்" என்கிற மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தியோடுஞ் சேரும்.

24. சூ. 183. "முகநாபி பாதங்கள் த்வாரத்ரயத்தாலே"—முகநாபி பாதங்களை என்பது சுத்தபாடம்.

25. சூ. 198. "வைத்தெழவூதி"—ஊத என்று திருத்துக.

26. சூ. 202. "போகேலென்றாலும் உகப்பையும் தவிர்ந்து"— 'போகேலென்றால் உகப்பையுந் தவிர்ந்து' என்பது சுத்த பாடம். 'உம்மை' இங்கு வேண்டா.

27. சூ. "அடைக்கலம் சூடி பொய்யாதானும்"—'சூடிய' என்று திருத்துக. *திருமால் திருப்பேர்வல்லாரடிக்கண்ணி சூடிய மாறன்* என்கிற திருவிருத்தப் பாசுரம் காண்க.

28. சூ. 211. "எம்மாவொழி நெடுவே யென்கிற"—'எம்மாவொழிவில் நெடு......' என்பது சுத்தபாடம்.

29. சூ. 118. "காலாஸக்தி பலகதிக்கு"—'காலாஸத்தி....' என்று திருத்துக.

30. சூ. 219. "வளவேழ்வைப்பாமவன் அவையுள்"—இங்கு 'அவன்' என்பது அநந்விதம். 'வளவேழ்வைப்பாமவையுள்' என்பதே சுத்தபாடம்.

31. சூ. 220. "எம்மா வீட்டை உபாயாநுகுணமாக்கினவர்"—'உபயாநுகுண...' என்று திருத்துக. (இதிலேயே) "திண்ணணேவதென்று"—"திண்ணனணேவதென்று" என்பது சுத்தபாடம்.

32. சூ 222. "ஆடுங்கள்ளிறைச்சி"='ஆடுகள்ளிறைச்சி' என்றுதிருத்துக. திருவாய்மொழியில் *அங்கோராடுங்கள்ளும் பராய்* என்றிருந்தாலும் உம்மைகளை நீக்கியே ஆசிரியர் பாசுரம் திரட்டியுள்ளாரென்பது ஸுஸ்பஷ்டம்.

33. 223. "தேவர்குழாங்களைக் கண்டு கூப்பிட்டு"-காப்பிட்டென்று திருத்துக. பொலிக பொலிக பொலிகவில் நோக்கு.

34. சூ. 224. "திரிவிக்கிரமனைக் குறள் கோலப்பிரானை"='திரிவிக்கிரமனைக் குறள்...' என்பது சுத்தபாடம்.

35. சூ. 226. 'அவர்க்கே குடிகளாய் பரதந்த்ரஸ்வரூபத்தை'—'குடிகளாம்' என்று திருத்துக.

36. சூ. 227. "வைகல்வாழ்முதலான ஸித்தோபாயம்"—"வாழ்தலான" என்று திருத்துக. *குற்றமில் சீர்கற்று **வைகல் வாழ்தல்*** என்கிற பாசுரமன்றோ இங்கு விஷயம்.

37. சூ. 228. அறியச் சொன்ன ஸுப்ரபாதத்தை'' —'ஸுப்ரபாதந்தே' என்று திருத்துக. (அதிலேயே) ''மாயையை மடிவித்து''— 'மடித்து' என்று திருத்துக. (அதிலேயே) ''ஸாக்ஷாத்கரித்த பரமப்ராப்திக்கு''—பரப்ராப்திக்கு என்று திருத்துக, ''ப்ரஹ்மவிதாப்னோதி பரம்'' என்ற உபநிஷத்துக்குச் சேர. (அதிலேயே) ''கூசம் செய்யாது செய்திப்பிழை''—'செய்யாத' என்று திருத்துக.

தெலுங்கிலும் தமிழிலுமுள்ள அச்சுப் பிரதிகளை வைத்துக்கொண்டு திருத்தம் காட்டுவதானால் இன்னமும் அதிகமாகவே காட்ட நேரும். அடியேன் வெளியிட்டுள்ள பதிப்புகளில் அக்ஷரந்தோறும் உற்று நோக்கினால் அந்த அபத்த பாடங்களெல்லாம் அறும். அடியேனுக்குங் கிடைக்காத சுத்த பாடங்கள் இன்னமும் இருக்கக் கூடும். அவற்றைப் பரமக்ருபையோடு தெரிவிப்பார் திறத்தில் பெருநன்றி பாராட்டி வெளியிடுவேன். இப்போது காட்டின திருத்தங்களில் ஒன்றுகூட அடியேன் ஸ்வதந்த்ரமாகச் செய்ததன்று. ஏடுகளில் கண்டனவும் பெரியார்வாய்க் கேட்டனவுமாம். இந்தத் திருத்தங்கள் வேண்டாதவையென்று தோன்றிப் பழைய பதிப்புகளிற் பாடங்களையே ஆதரிக்கவேணுமென்பார்க்கு அடியேன் மறுமாற்ற மொன்று முரைக்ககில்லேன். ''எங்ஙனே சொல்லிலு மின்பம் பயக்குமே'' என்ற ரீதியில் இந்த திவ்யக்ரந்தத்தை எவ்வண்ணமாகப் பாடங்கொண்டு அநுஸந்தித்தாலும் பரமபோக்யமேயாகும்.

இத்திவ்விய க்ரந்தத்திற்கு மணவாள மாமுனிகள் இட்டருளின வியாக்கியானம் அமுதிலுமாற்ற வினிது. அதினுடைய பரம போக்யதையை ஸர்வஜ்ஞர்களன்றோ கொண்டாட வேண்டும், உலகில் வியாக்கியானங்களருளிச் செய்த ஆசிரியர்கள் பலருளரெனினும் அவர்களுடைய வியாக்யானங்களிலே பலவகையான க்லேசங்களை யநுபவியாநின்றோம். பல குறைகளையுங் காணுகின்றோம். அப்படி ஒருவிதமான குறையும் கூறுதற்கிடமின்றியே ஒருவகையான க்லேசத்தையுங் கொடாதே ஸ்வச்ச கங்காப்ரவாஹமென்ன வமைந்த வியாக்கியானம் மணவாள மாமுனிகளுடையதேயாம். ஸகல சாஸ்த்ரங்களையும் மிகத்தெளிவாகத் திருவுள்ளத்திலடக்கிக் கொண்டிருந்து தேனும் பாலுங் கன்னலுமமுதுமான ஸ்ரீஸூக்திகளைத் தொடுக்குந்திறன் மாமுனிகளொருவர்க்கே அஸாதாரணமாகும்.

விசதவாக்சிகாமணிகளான மாமுனிகளின் வியாக்கியானத்திற்கு அரும்பதவுரை அநபேக்ஷிதமானாலும், அதிகாரிகளை நோக்கிச் சிலவிடங்களுக்கு அது அபேக்ஷிதமாகத் தோன்றுவதுண்டு; பல சூர்ணிகளின் வியாக்கியானத்தில் ஒருவிதமாக முன்னே விவரணம் காட்டிவிட்டு, உடனே (அதவா) என்று தொடங்கி மற்றொருவிதமாக விவரணம் செய்தருளுகிறார். அப்படிப்பட்ட இடங்கள் பலவுள்ளன. அவ்விடங்களில் முந்தின விவரணத்திற்கும் பிந்தின விவரணத்திற்கும் என்னவாசியென்பதை எளிதில் தெரிந்துகொள்ள முடியாதபடி சிலர் மயங்கநேர்கின்றது. அப்படிப்பட்டவிடங்களில் டிப்பணிகள் எழுதிச் சேர்க்கவேணுமென்று அவா இருந்தது. அது இந்தப்பதிப்பில் நிறைவேறவில்லை. முக்கியமாகச் சிலவிடங்களுக்காவது தெளிவுபெறுவிக்கவேண்டியதுண்டு; ஓரிடமிங்குக் குறிப்பிடுகிறேன்.

இரண்டாம் ப்ரகரணத்தில் (127) *அழுந்தொழும் ஸ்நேஹபாஷ்பாஞ்ஜலியோடே* என்ற சூர்ணையில் ஆழ்வார்க்கு சத்ருக்நாழ்வானோடு ஸாம்யம் நிரூபிக்குமிடத்தில் ''நித்ய சத்ருவிசிந்தநமுமான'' என்று மூலமுள்ளது. இங்கு மணவாளமாமுனிகள் ஒருவாறு வியாக்கியானஞ்செய்து முடித்து உடனே எழுதியருளுகிறார்.—

''விசிந்தந மென்கிறவிதுக்கு இப்படி வ்யாக்யானம் பண்ணிற்று இதின் பட்டோலையானதிலே 'உறுமோவென்று நித்ய சத்ருவைவென்று புலன்கொள் வடிவை விசிந்தயனுயிருக்கும்' என்று விசிந்தயன் என்றொரு வசனமுண்டாகவு மெடுத்து இப்படி

இவர்தாமே அருளிச்செய்து வைக்கையாலே. இவ்விடத்திலும் சிந்தந மென்னுமல் விசிந்தநமென்றது அவ்வசந ஸூசகமாகவிறே. *விசிந்தயந்* என்கிற வசநம் இன்ன விடத்திலே யென்று த்ருஷ்டமாய்த்தில்லை ; வந்தவிடத்திலே கண்டு கொள்வது. ''— என்று.

இதனால், சத்ருக் நாழ்வானைப்பற்றின ப்ரஸ்தாவத்தில் 'விசிந்தயந்' எனவரும் ப்ரமாண ச்லோகம் தமக்குத் தெரியவில்லை யென்று அருளிச் செய்வதாகத் தேறுகிறது. ஸர்வஜ்ஞரான மாமுனிகளுக்குத் தெரியாதது முண்டோ? அந்த வசனம் நம் போன்ற மித மதிகளுக்கும் தெரிகின்றதே; ஸ்ரீராமாயணத்தில் அயோத்தியா காண்டத்தில்(89-3) *நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி தமேவார்யம் விசிந்தயந்* என்கிற ச்லோகம் காணுகின்றதே; இது மாமுனிகளுக்குக் காணுமற் போக நியாயமில்லையே ; 'வந்தவிடத்திற் கண்டு கொள்வது' என்று எங்ஙனே யெழுத நேர்ந்தது? என்று விசாரம் தோன்றுமிங்கு.

இதன் தத்துவ மென்னவென்றால், மேலே யெடுத்துக் காட்டின 'நாஹம் ஸ்வ பிமி' இத்யாதி ச்லோகமானது இரண்டு வகையான பாடங்கொண்டு வந்திருக்கிறது. ''நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி **தமேவார்யம் விசிந்தயந்**'' என்பதாக ஒரு பாடம் ; இப்பாடமே ஆசார்யஹ்ருதயகாரர்க்குக் கிடைத்திருந்தபடியால் இதையிட்டு விசிந்தநமென்றும் விசிந்தயந் என்றுமருளிச் செய்தார். மற்றொரு பாடம் என்னவென்றால், *நாஹம் ஸ்வபிமி ஜாகர்மி **ராமமேவாநுசிந்தயந்*** என்பது. கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கி யான அரும்பதவுரையில் இவ்வகையான பாடமே எடுத்தாளப் பட்டிருப்பதனால் மண வாளமாமுனிகளுக்கும் இவ்வகையான பாடமே கிடைத்திருக்கக் கூடுமென்று தெரி கிறது. இப்பாடத்தில் **விசிந்தயந்** என்பது கிடையாதாகையாலும், **அநுசிந்தயந்** என்றே யிருப்பதாலும் ''விசிந்தயந் என்பதை வந்தவிடத்தே கண்டு கொள்வது'' என்று மாமுனிகள் எழுத ஔசித்யமுண்டாயிற்று.

இப்படிப்பட்ட பல விஷயங்களைக் கொண்ட டிப்பணியொன்று சேர்க்கப்பட வேணுமென்னுமவா பெரிது முள்ளது. அது மற்றொரு கால் நிறைவேறும்; மாமுனி களின் திருவருளும் வாய்க்கவேணும்.

இந்த வியாக்கியானத்தை முதன் முதலாகத் தெலுங்கு லிபியில் அச்சிட்டவர் களும் பிறகு தமிழ் லிபியில் அச்சிட்டவர்களும் பலவகைப் பிழைகளைப் புகுத்தி அச்சிட்டிருந்ததனால் சுத்தப் பதிப்பாக வெளியிடவேணுமென்கிற விருப்பம் அடியேனுக்கிருந்தது. பத்து வருஷங்களுக்கு முன் 'ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்த மாலா' தெலுங்கு லிபியில் அச்சிட்டேன் : அதில் இந்த திவ்யக்ரந்தமும் சேர்ந்துள்ளது. தமிழ் லிபியிலும் இதை மிகவும் திருத்தமாகப் பதிப்பிக்கவேணுமென விரும்பியே இப் பதிப்புச் செய்தது. சில சமயங்களில் அடியேன் வெளியே செல்வது முதலான காரணங்களினால் சில சில பாரங்களை அடியேன் திருத்திக் கொடுக்க முடியாமற்போன தனாலும் மற்றும் சில காரணங்களினாலும் இப்பதிப்பிலும் சில பிழைகள் புகுந்து விட்டன. அவற்றிற்குத் திருத்தம் இங்குக் காட்டப்படுகிறது. இதில் சில திருத் தங்களைப் பாட பேதமாகவுங் கொள்ளலாம். இத்திருத்தங்களை யெல்லாம் அவரவர் கள் முதலிலேயே ஆங்காங்குப் பொறித்துக்கொண்டு பிறகு ஸ்ரீகோசத்தை ஸேவிக்கு மாறு பிரார்த்தனை.

## பிழை திருத்தம்.

குறிப்பு :— பிழை திருத்தம் வெளியிடுமவர்கள் பக்கங்களின் லக்கமும் வரிகளின் லக்கமுமாக இரண்டு லக்கங்கள் குறிப்பதுண்டு. பக்கங்களை எளிதாகக் கண்டு பிடிக்கமுடியும். வரிகளை யெண்ணிக் கண்டுபிடிப்பது சிரமமாதலால் இங்கு நாம் வரிகளுக்கு லக்கமிடுவதில்லை. எந்த வரியில் திருத்தமுள்ளதோ அந்த வரியின் தொடக்கத்திலுள்ள சில எழுத்துக்களையே குறிப்பிடுகிறோம் ; அதைக்கொண்டு வரியை எளிதாகக் கண்டு பிடிக்கலாமென்று. ... ...

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரிஸங்கேதம் | அச்சிலுள்ளபாடம் | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | நிவ்ருத்தி | உண்டாக்கி ஜ்ஞாநம் | உண்டாக்கி இந்த ஜ்ஞான |
| 4 | யதாவாக | தோன்றுமையாலும் | தோற்றுமையாலும் |
| 5 | 3. த்யாஜ்யோ | த்யாஜ்யோபாதேயந்தான் | த்யாஜ்யோபாதேயங்கள் தான் |
| 6 | தாலே ஆநந்த | நிர்ப்பரனுயிருக்கை. | நிர்ப்பரனுயிருக்கை யென்கை. |
| 9 | ருக்கு | சாஸ்த்ரங்களையும் | சாஸ்த்ரத்தையும் |
| 11 | என்று துர்லப | *துர்லபோமாநுஷோதேஹோ | *மாநுஷோ தேஹோ |
| 13 | அமரத்வ | ரக்ஷணார்த்தமாக விலக்ஷண | ரக்ஷணார்த்தமாக க்ஷீராப்தியை மதித்து அம்ருதத்தை வாங்கினுப் போலே ஸம்ஸாரபீதராய் அம்ருதத்வ காமரானவர்களுடைய ரக்ஷணார்த்தமாக விலக்ஷண |
| 15 | ஸ்வரூப விரைய | *பதிம் விச்வஸ்ய* என்றும் | *பதிம் விச்வஸ்ய* |
| 16 | ஆனந்தம் உதிக் | ஸ்வரூப விரோத்யுதய | ஸ்வவிரோத்யுதய |
| ,, | ஸ்வப்ரயோஜ | ஸ்வரூப | ஸ்வ |
| ,, | விரோத்யுதய | ஸ்வரூபவிரோத்யுதய | ஸ்வவிரோத்யுதய |
| 21 | அதாவது சாதி | தூயோம்பு | தீயோம்பு |
| 22 | மதுக்குமுப. | பகவத்ஸம்பந்தத்தையிட்டு வ்யபதே | பகவத்ஸம்பந்தத்தையிட்டும் பகவதீய ஸம்பந்தத்தையிட்டும் வ்யபதே |
| 24 | ல்பஜ்யோதி | ல்பஜ்யோதிஷ | கல்பஜ்யோதிஷ |
| 25 | 45. ஆனல் | அந்த வைபவத் | அந்த வேதவைபவத் |
| 26 | நான்மறை | அநாதியாகவும் அழி | அநாதியாகவும் மேல் அழி |
| 28 | ஃசந்தச்சு | நிரூபகமாட | நிரூபகமாக |
| 29 | ரஸஸஹித | *ஹாவு ஹாவு* | *ஹாவு ஹாவு ஹாவு* |
| 32 | பஞ்சாரே | காலசக்ரேத்மகே | கால சக்ரே |
| 35 | அதாவது— | பகவத் ஸ்வரூப | பகவத் ஸ்வரூபரூப |
| ,, | ச்யாதாக்ரி | இத்யாதியாலும் | (இங்கே வாக்கிய விராமம் கூடாது) |
| 37 | மாஹாத்ம்யம் | ப்ரகீத்ர்திதம் | ப்ரகீர்த்திதம் |
| 40 | சோகித்து | மேலே தொடுக்கு | மேலே மேலே தொடுக்கு |
| 43 | அஸத்கீர் | காட்டிலே அலைந்து | காட்டிலே அலமந்து |
| 44 | தத்குண | ததுபாஸநத்த்பலா | ததுபாஸந தத்பலா |
| 45 | ஸ்வவைல | சக்திகளை | உக்திகளை |
| ,, | 66. அவர் | அருளிச் செய்தரு | அப்படி அருளிச்செய்தரு |
| ,, | மென்று— | சாஸ்ரங்கள் | சாஸ்த்ரங்கள் |
| 46 | மானவற் | தத்தததநுகுண | தத்ததநுகுண |
| 47 | கிறதுமேல் | (எழுத்தியத்யாதி) | (எழுத்தித்யாதி.) |
| ,, | பதின்மூன் | ஆகிறவிரண்டையும் | ஆகிறவிரண்டசையும் |
| ,, | தைந்தளும் | மழையினி | உழையினி |
| ,, | தாளக: | பணிபாதேள | பாணிபாதேள |

| பக்கம் | வரிஸங்கேதம் | அச்சிலுள்ளபாடம் | திருத்தம் |
|---|---|---|---|
| 48 | கந்தமில் | ஷாணகுண்யாத் | ஷாட்குண்யாத் |
| 59 | இவ்வாபத். | பச்சிபம் | பச்சிமம் |
| ,, | ஸீதம் ஸ்வரம் | மோக்ஷயிஷ்யதி | மோக்ஷயிஷ்யஸி |
| ,, | தத்ரவரம் | ஸம்ஜ்ஞ்தஃ | ஸம்ஜ்ஞிதஃ |
| 60 | மண்ட | மண்டமான | மண்டபமான |
| ,, | ,, | திருவுள்ளமறிப் | திருவுள்ளமறியப் |
| ,, | உத்தராக | உத்தராகராம் | உத்தாரகராம் |
| 61 | ஸத்வ்ருத் | வர்ணுதியானத்தை | வர்ணுதியானவத்தை |
| ,, | தண்ணிய | ஆயாஸாயாமரம் | ஆயாஸாயாபரம் |
| ,, | சோபநா | அப்ராணஸ்ஸேவ | அப்ராணஸ்யேவ |
| ,, | தேஹஸ்ய | பகவத்பத்தி | பகவத் பக்தி |
| 62 | நேவ * | ஸந்தமேநம்ததஃ | ஸந்தமேநம்* |
| 63 | படியான | அவனடிபடிவும் | அவனடி படவும் |
| ,, | அதாவது | சேஷாபில்ஷிதம் | சேஷாபிலஷிதம் |
| ,, | மாய்கர்ம | ஆதரிப்பார் | ஆதரிப்பர் |
| 64 | போது | போதுஸௌஸ்ப | போதே ஸௌஸ்ப |
| 68 | யுடைய | பெரியாரென்ற | பெரியாராரென்ற |
| ,, | யோட்டி) | ப்ராம | ப்ரமா |
| 74 | விவேகமா | விவேகமாவது | விமோகமாவது— |
| 77 | யும், மநோ, | விஷயமாகையாலும் | விஷயமாகையும் |
| 81 | வந்ததென்றெ | உத்திகளாலே | உக்திகளாலே |
| 86 | ளெல்லாம் | இதி ப்ஜா நா | இதிப்ரஜாநா |
| 92 | வலியவேறி | வ்யாவ்ருத்யுக்த்த்யாதிகள். | வயாவ்ருத்த்யுக்த்யாதிகள். |
| 93 | அவிஷய | லக்ஷணகைக்கு | லக்ஷணக்கைக்கு |
| 94 | ராநுபவமும் | கலங்கும்படி அந்தஃ | கலங்கும்படி பிறந்த அந்தஃ |
| ,, | அதாவது-*புண் | *புண்ணிம் பாவம் | *புண்ணியம் பாவம் |
| 96 | சதுர்திவஸ | சேஷத்வாநுகுணமாக | சேஷத்வாநுகுணமான |
| 97 | ரானதிவ்யா | ப்ரமாலங்காகரணு | ப்ரஹ்மாலங்காரேணு |
| 104 | இப்படிபிரா | பிரியில் தரியாமைக்கு | பிரியில்தரியாமையுடையார் |
| 112 | அதாவது-கிண் | பலதலையாய்ப் பரந்து | பலதலையாய்ப் பாய்ந்து |
| 113 | சேதந | *சிவச் | *சிவ |
| 117 | (மூலம்) தோழி | வாத்-ஸல்யாதி | வாத்ஸல்யாதி |
| 119 | அவ்வூரிலே | கொண்புக்கு | கொண்டுபுக்கு |
| 121 | யற்று | தேவதாந்தர்யாமி | அந்தர்யாமி |
| 123 | (மூலம்) தாஸே | தாஸே | தாலே |
| 132 | செல்வம் மல்கு | ரக்ஷணம் பண்ணி வாரா | ரக்ஷணம்பண்ணவாரா |
| 133 | செய்கையும் | பின்துஷ்ட | பின்புதுஷ்ட |
| 135 | தனக்கே | தனக்கேப்ரகார | தனக்குப்ரகார |
| 137 | கூலராலும் | தைர்ய குணம் | ஸ்தைர்ய குணம் |
| ,, | வல்லஸாமர் | தன்னில் சேராத | தன்னில்தான் சேராத |
| 151 | அங்ஙனன்றி | *வீடுமின் முற்றவும் | *வீடுமின் முற்றம் |

| பக்கம் | வரிஸங்கேதம் | அச்சிலுள்ளபாடம் | திருத்தம் |
|---|---|---|---|
| 153 | இருவர்க்கு | ளிரண்டிலுமென்கை. | ளிரண்டிலுமுண்டென்கை. |
| 154 | கனத்துத்தோ | அவ்வழியாலே அகில | அவ்வழியாலே அந்த அகில |
| 158 | ரஹஸ்யத்ர | யிருக்கும்படி ப்ரகாசி | யிருக்கும்படியை ப்ரகாசி |
| 159 | கடலோ* | கண்டிலமால்*விரோதி | கண்டிலமால்*என்று விரோதி |
| 164 | வத்ப்ரதிய | பக்திபரான | பக்திபரரான |
| 166 | அதாவது—பாட் | வேண்டுமாகையாலே | வேண்டுகையாலே |
| 168 | சேஷமாய் | ஆத்ம தர்சந | அந்த ஆத்மதர்சந |
| 173 | [2] (உலரா | தாபமாறும்பண் | தாபமாறும்படி |
| ,, | *அந்தாமத் | பசுடி | பண் |
| 176 | யொழிய | நிஷ்ப்யோஜநம் | நிஷ்ப்ரயோஜநம் |
| ,, | [1] (முழுது | ஸர்வவ்யங் | ஸர்வவ்யா |
| ,, | பகன்) | நிறைந்தவெர | நிறைந்த வெங் |
| 179 | பாடலென்னு | யாவதாத்மபாவிபகவதநு பவந்தான் | யாவதாத்மபாவி பகவதநு பவத்தோடே வர்த்திக்கிற தேசத்தையும், அவ்வநு பவந்தான் |
| 180 | விழவு தீரும் | தேசவிசேஷத்திதே் | தேசவிசேஷத்திலே |
| ,, | தாப்போலே | முக்த போகத்யை | முக்த போகத்தை |
| ,, | ஜகந்நிகர | ஜகந்நிகரணுதி | ஜகந்நிகிரணுதி |
| ,, | ,, | அல்லாதாரடை, | அல்லாதாரடைய |
| 182 | டைய அங் | அங்நோங்யம் | அங்யோங்யம் |
| 185 | ஸ்ரீவைகுண் | வைகுண்டத்திலுள்ளாரையும் | வைகுண்டத்திலுள்ளாராயும் |
| ,, | ,, | த்வீபத்திலுள்ளாரையும் | த்வீபத்திலுள்ளாராயும் |
| 189 | தந்த்ர்யத்தா | வ்யவஸாயரஹித | வ்யவஸாய ஸஹித |
| 193 | ப்ரகாசிப் | ப்ரகாசிப்பித்தார் | ப்ரகாசிப்பிக்கிருர் |
| 196 | முதலாழ்வார் | கவிபாடுவித்த | கவிபாடுவித்துக் கொண்ட |
| ,, | ஹர்ஷத்துக்கு | ஹாவு ஹாவு | ஹாவு ஹாவு ஹாவு |
| 200 | விஷயமே | ப்ராபகமென்று | ப்ராபகமுமென்று |
| 201 | தனுபவித்த | காட்டக்கண்டு, அதுக்கு | காட்டக் கண்டதுக்கு |
| 204 | 228. பத்தாம் | பத்தாம் த்தில் | பத்தாம் பத்தில் |
| ,, | யாலே | யாலே | யாகையாலே |
| 210 | பர்யாயம் | சொல்லீர்களாகி | சொல்லவல்லீர்களாகி |
| 211 | [10] | அவை யாவையு | அவை யாவரையு |
| 215 | யநுபவி | யநுபவித்து | யநுபவிப்பித்து |

மற்றும் புலப்படும் பிழைகளையும் திருத்திக் கொள்க.

இப்படிக்கு

**ஸ்ரீ காஞ்சி. ப்ர. அண்ணங்கராசாரியன்.**

**25—10—50**

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :



அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச் செய்த

# ஆசார்யஹ்ருதயம்.

## பொதுத் தனியன்கள்

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் :
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்.
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.

யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே,
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ :
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே.

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதி:
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்,
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா.

பூதம் ஸரச்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலசேகரயோகிவாஹாந்,
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம்.

## ஆசார்யஹ்ருதயத் தனியன்கள்

ஆசார்யஸ்வாந்தவக்தாரமபிராமவராபிதம்,
ஸ்ரீக்ருஷ்ணதநயம் வந்தே ஜகத்குருவராநுஜம்.

த்ராவிடாம்நாயஹ்ருதயம் குருபர்வ க்ரமாகதம்,
ரம்யஜாமாத்ருதேவேந தர்சிதம் க்ருஷ்ணஸூநுநா.

பணவாளரவணைப்பள்ளிபயில்பவர்க்கெவ்வுயிரும்
குணபோகமென்றுகுருகைக்கதிபனுரைத்ததுய்ய
உணர்பாவினுட்பொருளொன்றுமறியாவுலகறிய
மணவாளன்மாறன் மனமுரைத்தான் வண்முடும்பைவந்தே.

மாதவத்தோன்மாறன்மனங்கூறும்மணவாளன்
தோதவத்தித்தூய்மறையோரானபெற்றார்—நீதியினா
லாங்கவர்தாள்சேர்பெற்றாராய்மணவாளமுனி
பூங்கமலத்தாள்கள்நெஞ்சேபோற்று.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

## மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

# ஆசார்யஹ்ருதய வ்யாக்யாநத்தின் அவதாரிகை



*ச்ரிய: பதியாய் ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரன், நிரதிசயாநந்த மயமான ஸ்ரீவைகுண்டத்திலே, நித்ய நிர்மலஜ்ஞாநாதிகுணகராய் ஸ்வச்சந்தாநுவர்த்திஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்தி பேதரான நித்யஸூரிகளாலே அநவரதபரிசர்யமாணசரண நளிநனாய்க்கொண்டு எழுந்தருளியிராநிற்க, லீலா விபூதியிலுள்ளார் அவர்களோபாதி தன்னை யநுபவிக்க ப்ராப்தி யுண்டாயிருக்க இழந்துகிடக்கிறபடியைக்கண்டு அதிவ்யாகுலனாய், இவர்களை யுஜ்ஜீவிப்பிக்கையிலுண்டான நசையாலே, *அசிதவிசேஷிதாந் ப்ரளயஸீமநி ஸம்ஸரத: கரணகளேபரைர்க் கடயிதும் தயமாநமநா:* என்கிறபடியே, கரணகளேபர விதுரராய் அசிதவிசேஷிதராய் அதஏவ போகமோக்ஷ சூந்யராய்க் கிடக்கிற தசையிலே தயமாநமநாவாய்க்கொண்டு, ஸ்வசரணகமல ஸமாச்ரயணோபகரணமான கரணகளேபரங்களைக்கொடுத்து ஜ்ஞான விகாஸத்தையும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி சக்தியையு முண்டாக்கி ஜ்ஞாநகார்யமான த்யாஜ்யோபாதேய விவேக பரிகரமாக *மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி* என்கிறபடியே, வேதப்ரதாநத்தைப்பண்ணி, அநந்தரம் மந்வாதிகளுக்கந்தர்யாமியாய் நின்று, சேதநருடைய விசிஷ்டவேஷவிஷயமான சாஸ்த்ரத்தை வெளியிட்டருளி, அந்த சாஸ்த்ராப்யாஸம் அநேக யோக்யதாஸாபேக்ஷமாய், சிரகால ஸாத்யமுமாயிருக்கையாலே துஷ்கரமாயிருக்கிறபடியைத் திருவுள்ளம் பற்றி தாத்ருசயோக்யதா நிரபேக்ஷத்வாதிகளாலே ஸுகரமுமாய் சேதந நிஷ்க்ருஷ்டவேஷ விஷயமுமான திருவஷ்டாக்ஷரப்ரஹ்ம வித்யையை ஸ்வயமேவ வெளிப்படுத்தினவளவிலும் கார்யகரமாகாமையாலே, ஓலைப்புறத்திற் செல்லாத ராஜ்யத்தை எடுத்துவிட்டுச் செலுத்திக்கொள்ளும் ராஜாக்களைப் போலே நாமே சென்று திருத்தக்கடவோமென்று ராமக்ருஷ்ணாத்யவதாரமுகேந இவர்களிருக்கிற விடத்திலே தான்வந்து திருத்தப் பார்த்த விடத்திலும், ஒருவரும் திருந்தக் காணாமையாலே விஜாதீயரான நம்மாலொருபடியாலும் இவர்களைத் திருத்தப் போகாதாயிருந்தது; இனி, இணக்குப்பார்வையிட்டு ம்ருகம்பிடிப்பாரைப்போலே ஸஜாதீயரைக்கொண்டே காரியம்கொள்ளுவோமென்று அறுதியிட்டு அதுக்கு, *ஆமுதல்வரையுண்டாக்குகைக்காக ஸர்வபூத ஸுஹ்ருத்தான தன்னுடைய நிர்ஹேதுக ப்ரஸாதத்தாலே எங்கும்பார்த்து இலக்குக்காணமல் வாராநிற்க, அந்தப்பார்வை தனக்குப்பள்ளமடையான தென்திசையிலே யானவளவிலே, *மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து* என்கிறபடியே ஜந்ம பரம்பரைகளிலே தோள்மாறி நித்யஸம்ஸாரியாய்ப்போருகிற விவர்மேலேபட, அந்த நிர்ஹேதுக கடாக்ஷ விசேஷலப்த திவ்ய ஜ்ஞாநபக்திகரானவாழ்வார், தத்ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை விசத விசததர விசததமமாக அநுபவித்து அவ்வநுபவ பரிவாஹ ரூபேண பேசுகிற பாசுரமானது சோக வேக ஜநிதமான * மாநிஷாதேத்யாதி ச்லோகம் ப்ரஹ்மாவின் ப்ரஸாதத்தாலே லக்ஷணோபேதமானாப்போலே பகவத்ப்ரஸாதமடியாக ஸர்வலக்ஷணோபேதமான ப்ரபந்தமாய்த் தலைக்கட்டிற்று.

இதுதானும், த்ராவிடவேததயா விஸ்தீர்ணமாய் அநேகார்த்த ப்ரதிபாதகமாயிருக்கையாலே, இதில் தாத்பர்யார்த்தம் ஸர்வர்க்கும் ப்ரதிபத்தி விஷயமாகை அரிதென்று பார்த்து, இதிலர்த்த விசேஷங்களையும், இவற்றில் ஆழ்வார் திருவுள்ளக் கருத்தின் ப்ரகாரத்தையும் இவ்வாசார்ய ருசிபரிக்ருஹீதமான அர்த்தமே யெல்லார்க்கும் தஞ்சமென்னுமத்தையும், இவர் தம்முடைய பரமக்ருபையினாலே ப்ரகாசிப்பியாநின்றுகொண்டு ஆசார்ய பரம்பராப்ராப்தமான இவ்வர்த்தங்கள் எல்லார்க்கும் ப்ரதிபத்தியோக்யமாம்படி அநதிஸங்க்ரஹாநதிவிஸ்தரமாக இவ்வாசார்யஹ்ருதய ப்ரபந்தமுகேந அருளிச்செய்கிறார்.

ஃஆத்யஸ்ய ந: குலபதே:ஃ என்கிறபடியே வைதிகஸந்தாநத்துக்கு ப்ரதமாசார்யரான ஆழ்வாரருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக் கருத்துக்களைச் சொல்லுகையாலேயிறே இப்ரபந்தத்துக்கு ஆசார்யஹ்ருதயமென்று நிரூபகமாய்த்து. இப்ரபந்தத்தில் இவரருளிச் செய்கிற வாக்யங்களெல்லாம் அருளிச்செயல் சந்தைகளைச் சேர்த்தருளிச் செய்கிறது—ஃமயர்வற மதிநல மருளப்பெற்றவர்கள் பேசின திவ்யஸூக்திகளாகையாலே ஆப்ததமமுமாய் அந்தபோக்யமுமாயிருக்கிறவிதுவே தமக்கு அநவரதாபிமதமாகையாலும், முகமறிந்தவன் கோத்த முத்து பெருவிலையனுமாப்போலே சந்தைகளைத் தாம் சேர்த்தசாதுரியாலே அருளிச்செயலில் ரஸஜ்ஞர்க்கு இதில் அர்த்தத்திலுங் காட்டில் சப்தந்தானே மிகவு மினிதாயிருக்குமென்று மபிப்ராயத்தாலும். ஆகையாலிப்ரபந்தம் சப்தார்த்தங்களிரண்டின் ரஸத்தாலும் விசேஷஜ்ஞமநோஹரமாயிருக்கும் .... .... .... .... ....*

அவதாரிகை முற்றிற்று.

1. இதில் முதல்சூர்ணையாலே ஃஹர்த்தும் தமஸ் ஸதஸதீ ச விவேக்துமீசோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதிஃ என்கிறபடியே, ஆகஸ்மிகக்ருபாவானான ஸர்வேச்வரன் அஜ்ஞரான ஸம்ஸாரிசேதநர்க்கு ஸதஸத் விவேக பரிகரமாக சாஸ்த்ரப்ரதாநத்தைப் பண்ணி யருளினபடியை அருளிச்செய்கிறார்.

**காருணிகனான ஸர்வேச்வரன் அறிவிலாமனிசர் உணர்வேன்னும் சுடர் விளக்கேற்றிப் பிறங்கிருள் நீங்கி மேலிருந்த நந்தா வேத விளக்கைக் கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய்விரிந்தவிளக்கமில் விளக்கில் கோளுத்தின ப்ரதீபமான கலைகளைநீர்மையினாலருள்செய்தான். 1.**

(காருணிகனான ஸர்வேச்வரன்)—க்ருபா விசிஷ்டஸ்வதந்த்ரனென்றபடி. க்ருபாவானானாலும் ஸ்வதந்த்ரனன்றாகில் தான் நினைத்தபடி கார்யம் செய்யப் போகாது; கேவல ஸ்வதந்த்ரனானாலும் ஸம்ஸார மோக்ஷங்க ளிரண்டுக்கும் பொதுவான ஸ்வாதந்த்ர்யம் சேதநோஜ்ஜீவநார்த்தமான க்ருஷிக்கு உறுப்பாகமாட்டாது; ஆனபின்பு க்ருபா விசிஷ்டமான ஸ்வாதந்த்ர்யமேயிறே ஸம்ஸாரிசேதநோஜ்ஜீவந விஷயமாக அவன் பண்ணும் க்ருஷிக்கு ஹேதுவாவது; அதவா, ஸர்வேச்வரனென்று ஈசேசிதவ்யஸம்பந்தத்தைச் சொல்லுகிறதாகவுமாம். ஃக்ருபாயோகாச்ச சாச்வதாத்ஃ என்றவநந்தரம், ஃஈசேசிதவ்ய ஸம்பந்தாத் அநிதம்ப்ரதமாதபிஃ என்கையாலே க்ருபாயோகமும் ஸம்பந்தமும் இரண்டும் ஸம்ஸாரி சேதந ஸம்ரக்ஷணார்த்த ப்ரவ்ருத்திஹேது விறே. க்ருபாயோகத்துக்கு மேலே ஸம்பந்தம் உக்த மாகையாலே ஸம்பந்த ப்ராதாந்யம் சொல்லிற்றாகிறது. இத்தால், இவை நம்முடையவையன்றோ வென்கிற அபிமாநத்தோடே பரது:க்காஸஹிஷ்ணுத்வரூபையான க்ருபையும் கூடுகையாலே உத்தரோத்தரம் சேதநோஜ் ஜீவநத்துக்கு க்ருஷிபண்ணிப் போருமவனென்றதாய்த்து.

(அறிவிலா மனிசர்) — *அறிவிலா மனிசரெல்லாம்* என்கிறபடியே அஜ்ஞாந தமோயுக்தரான சேதநர். *அந்தம் தம இவாஜ்ஞாநம்* என்னக்கடவதிறே. தம:* என்றுஅஜ்ஞாநத்தைத் தமச்சப்தத்தாலே அருளிச்செய்தாரிறே. *ஹார்த்தும் அநாத்யஜ்ஞாநாந்தகாரத்தாலே அபிபூதராய், அத்தாலே ப்ரக்ருத்யாத்ம விவேகம் முதலானவொரு விவேகமு மின்றிக்கே யிருக்கிற ஸம்ஸாரிசேதந ரென்கை.

(உணர்வென்னும் சுடர்விளக்கேற்றி) — *உணர்வென்னு மொளிகொள் விளக் கேற்றி* என்றும், *ஞானச் சுடர்விளக்கேற்றினேன்* என்றும் சொல்லுகிறபடியே தைலவர்த்திகளாலுண்டான வழுக்கன்றிக்கே திணுங்கின தேஜஸ்ஸா யிருக் கிற ஜ்ஞாநமாகிற உஜ்ஜ்வலதீபப்ரகாசத்தைஉடைத்தாய். ஜ்ஞாநத்தை விளக் கென்கிறது, ஸ்வபர ப்ரகாசகத்வமாகிற ஸ்வபாவ ஸாம்யத்தாலே

(பிறங்கிருள் நீங்கி) — *பிறங்கிருள் நிறங்கெட* என்றும் *பின்னிவ்வுலகினில் பேரிருள்நீங்க* என்றும் சொல்லுகிறபடியே, மிகுந்த அஜ்ஞாநாந்தகாரம்போய்.

(மேலிருந்த நந்தாவேத விளக்கைக் கண்டு) — *வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு* என்றும் *நந்தா விளக்கு* என்றும் *வேதவிளக்கினை* என்றும் சொல் லுகிறபடியே, வேதாந்தங்களில் ஸர்வஸ்மாத்பரனுக ப்ரகாசியாநிற்பானுமாய்: நித்யமாய் ஸ்வயம்ப்ரகாசமான ஜ்ஞாநத்தை ஸ்வரூபமாக உடையனுமாய், வேதைக ஸமதிகம்யனுமான தன்னை, *என்தக்கஞானக்கண்களாலே கண்டு* என்கிறபடியே ஜ்ஞாநசக்ஷுஸ்ஸாலே தர்சித்து.

(நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு) — *இவையன்றே நல்ல இவையன்றே தீய* என்கிறபடியே, ஸதஸத் விவேகம் பண்ணுகைக்கு. *ஸதஸதீச விவேக்தும்* என்றாரிறே. "நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு" என்கிற விது ஸாமாந்யேந விலக்ஷண விவேகத்தைக் காட்டுமேயாகிலும், இவ்விடத்தில், பகவத்விஷயம் நன்று, ஸம்ஸாரம் தீது என்று விவேகிக்கையைக் காட்டக்கடவது. "நந்தாவேத விளக்கைக்கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு" என்கையாலும், விவேக பல மான த்யாகஸ்வீகாரவிஷயங்கள் ஸம்ஸார மோக்ஷங்களாகவே மேல்சொல் லுகையாலும். பகவத் விஷயத்தைக் கண்டபின்பு ஸதஸத் விவேகம் பண்ணு கையாவ தென்னென்னில்? ப்ரதிகோடி கண்டாலொழிய அதின்தோஷம் யதாவாகத் தோன்றுமையாலும், இத்தைப்பற்ற இது நன்று இது தீது என்னும் போது உபயகோடியும் கண்டுகொள்ள வேண்டுகையாலும் சொல்லிற்று.

(மறையாய் விரிந்த துளக்கமில் விளக்கில் கோளுத்தின ப்ரதீபமான கலைகளை) — *மறை யாய் விரிந்த விளக்கை* என்றும் *துளக்கமில் விளக்கம்* என்றும் சொல்லுகிற படியே, *அகாரோ வை ஸர்வா வாக்* என்கையாலே வேதரூபேண விஸ்த்ருத மாய்த்தது தானென்னும்படி ஸகலவேத காரணமாய், தனக்கொரு காரண மில்லாமையாலே சலநமின்றிக்கே ஸகலார்த்த ப்ரகாசகமாயிருக்கிற அகாரத் தில் நின்று முத்பந்நமாய், தீபாதுத்பந்ந ப்ரதீபம்போலே *மாநம் ப்ரதீபமிவ* என்கிறபடியே த்யாஜ்யோபாதேயார்த்தங்களை ஸ்புடதரமாக ப்ரகாசிப்பியா நின்றுள்ள, *பன்னுகலை நால்வேதம்* என்றும் *கலைகளும் வேதமும்* இத் யாதியாலும் சொல்லப்படுகிற ச்ருதியும் ததுபப்ரும்ஹணங்களுமான சாஸ்த்ரங் களை. *மறையாய் விரிந்த விளக்கை* *துளக்கமில் விளக்கமாய்* என்று அகாரத்தை ஈச்வரனோடே ஸமாநாதிகரித்தது *அ இதி ப்ரஹ்ம* என்கிற படியே வாச்ய வாசக ஸம்பந்தத்தாலே.

(நீர்மையினு லருள்செய்தான்)-நீர்மை-ஸ்வபாவம். தன் ஸ்வபாவத்தாலே கொடுத்தா னென்கை அதாவது, தன்சௌஹித்வஸ்வபாவத்தாலே யென்னுதல், காருணிகனுன தன்க்ருபையாகிற ஸ்வபாவத்தாலே என்னுதல், ஸமுச்சயமாதல். பூர்வயோஜனை— நீர்மையினு லென்கிறதற்குப் பூர்வர்களிட்ட [பெரியதிருமொழி 2-8-5.] வ்யாக் யாநத்திற்கும், "இந்த உதிரத்தெறிப்பு த்ரைகுண்ய விஷயமானவற்றுக்கு ப்ரகா சகம்" என்றிவர்தாம் மேலருளிச் செய்கிறதற்கும் சேரும். நடுவில் யோஜனை, காருணிகனுன வென்றிவர் ப்ரதமத்திலே யெடுத்ததுக்கும் *காருணிகோ ததாதி* என்று பட்டரருளிச் செய்ததற்கும் சேரும். மூன்றும்யோஜனை, "காருணிக னுன ஸர்வேச்வர" னென்கிற விடத்தில் சொன்ன இரண்டாம் யோஜனைக்குச் சேரும். ஆக இச்சூர்ணையால் அஜ்ஞரான ஸம்ஸாரி சேதனர் ஜ்ஞாநப்ரகாசத்தை யுடையவராய் அந்தவஜ்ஞாநம் நீங்கித் தன்னைக்கண்டு ஸதஸத்விவேகம் பண் ணுகைக்கு உறுப்பாக ஈச்வரன் சாஸ்த்ர ப்ரதாநம் பண்ணினபடியை தந்நி தாநத்தோடே அருளிச்செய்தாராய்த்து... ... ... ... ... ... (1)

2. இவ்விவேகத்திற்கு பலமேதென்னச சொல்லுகிறது; (விவேகேத்யாதி.)

விவேகபலம் வீடுபற்று. 2.

அதாவது இப்படி யவன் கொடுத்த சாஸ்த்ர ஜந்ய ஜ்ஞாநத்தாலே நல்லதும் தீயதும் விவேகிக்கைக்குபலம், த்யாஜ்யத்தை விடுகையும் உபாதேயத் தைப் பற்றுகையு மென்கை. த்யாக ஸ்வீகார மென்னுதே வீடுபற்றென்கை யாலே *வீடுமின்முற்றவும்* *அற்றிறைபற்று* என்ற ஆழ்வார் பாசுரத்தை யுட்கொண்டருளிச் செய்தமை தோற்றுகிறது.... ... .. ... ... (2)

3. த்யாஜ்யோபாதேயந்தா னைவையென்னச் சொல்லுகிறது-(த்யாஜ்யேத்யாதி.)

த்யாஜ்யோபாதேயங்கள் ஸுகதுக்கங்கள். 3.

அதாவது :— *ஸுகீ பவேயம், து:க்கீ மா பூவம்* என்று ஸர்வர்க்கும் து:க்கம் அநிஷ்டமாய் ஸுகம் இஷ்டமாகையாலே, து:க்கம் த்யாஜ்யம், ஸுக முபா தேயம் என்கை... ... ... ... ... ... ... ... ... ... (3)

4. இவைதான் கர்மாநுகுணமாக நின்ற நின்ற நிலைகளிலே யுண்டாகையாலே இவற்றின் பரமாவதியைச் சொல்லுகிறது (இவற்றுக் கித்யாதி.)

இவற்றுக்கெல்லை இன்புதுன்பளி பன்மா மாயத்தழுந்துகையும்,
களிப்புங் கவர்வுமற்றுப் பேரின்பத்தின்புறுகையும். 4.

அதாவது து:க்கத்துக்குப் பரமாவதி "இன்பு துன்பளி" என்று தொடங்கி- ஸுக து:க்காவஹங்களாய் அநாதியாய் துஸ்தரமாயிருந்துள்ள ப்ரக்ருதிஸம்பந்த நிபந்தநமான ஜந்மங்களில் நின்றும் ஒருகாலும் நீங்காமைக்குறுப்பானவையாய், பலவகைப்பட்டிருப்பனவாய், அகப்பட்டார் தப்பவரிதாமவையாய் *இன்னமு தெனத் தோன்றி எத்தனையேனும் அறிவுடையாரையும் கலங்கப்பண்ணுகை யாலே ஆச்சர்யங்களாயிருந்துள்ள சப்தாதி விஷயங்களிலே அகப்பட்டு *அழுந்துமா* என்கிறபடியே *அநந்தக்லேச பாஜநமான ஸம்ஸாரத்திலே யழுந்துகை. ஸுகத்துக்குப் பரமாவதி *களிப்புங் கவர்வுமற்று* என்று

